இதுவுமது

(உஎரு) செய்யவேரவிமதியும்சேர்த்துக்கொண்டு
திரமாகத்தசட்டினில்உச்சாடனம்தான்றிறி
உய்யவேபிணியாளன்தனக்குக்கட்ட
ஓடிவிடும்பீடைஎன்றதோஷம்எல்லாம்
துய்யவளாம்கன்னிக்குஉபசாரம்செய்
சொற்பெரியவேதியர்க்கும்உபசாரம்செய்
வையகத்தில்இவைகள்எல்லாம்நன்றுநன்றும்
மக்களேமண்டலம்தான்அரையாம்செய்யே. (ருச)

மரணகாலப்பணிக்குச்சாந்தி.

(உஎசு) செய்யடாமரணத்தின்பீடைவரும்ஆகில்
திரும்புவதுவருத்தம்அடாசிவன்செயலேவேண்டும்
துய்யனும்கணபதியைவைத்துப்போற்றித்
தொடுத்திடுவாய்வாலையிடம்கும்பம்வைத்து
மெய்யானஓமகுண்டம்எட்டுபோடு
விளம்புகின்றசமித்துவகைசொல்வேன்மைந்தா
தைஅரசுஅத்திஇத்திஉருவிவன்னி
தனதானகருங்காலிமாவின்கொம்பே. (ருரு)

இதுவுமது.

(உஎஎ) கொம்புடனேபுரசுசுப்பல்நெல்லிசுப்பல்
கோர்வையாய்நவதரங்கியம்பொரியும்கூட்டி
அன்புடனேமேதைநெய்யும்செம்மரியின்நெய்யும்
அப்பனேஇலுப்பைநெய்யும்தேங்காய்நெய்யும்
தென்புடனேபுன்னைநெய்யும்புங்கன்நெய்யும்
தெளிவானவேம்பின்நெய்பன்றிநெய்யும்
இன்புடனேகேசரியின்நெய்யும்கூட்டி
எடுத்திடுவாய்எக்கியத்தில்இனிதாய்பாரே. (ருசு)

இதுவுமது.

(உஎஅ) பாரோநீகுண்டம்எட்டில்கர்மம்எட்டும்
பாங்காகஜபம்பதினாயிரமேனுறல்
வேறேநீநினையாதேபொங்கல்பெலிதூபம்
வேணதும்செய்தெரிந்ததனைக்கும்பத்திட்டு
நேரோநீநின்றுசதாசிவத்தைப்போற்றி
நீர்கொண்டுஅவன்சிரசில்அபிஷேகித்தால்

சோமல்மண்டலம்ஒன்றிவ்வண்ணம்தான்
தொடர்ந்துநின்றதோஷம்எல்லாம்விலகும்பாரே. (ருஎ)

இதுவுமது.

(உஎகூ) விலகுமேல்இவ்விதத்தால்வந்ததோஷம்
வேறெனினும்இவ்வண்ணம்சாந்திதானே
சலனம்இல்லைசெய்துகொண்டால்நீங்குமநீங்கும்
தாணிதனில்சவுக்கியமாய்வாழலாகும்
இலகுவதாம்என்னசெய்யப்போகுதென்று
எளிதாகநினைத்துவிட்டால்இழுத்துக்கொல்லும்
*அலையவேபிரமலிபிஉள்ளமட்டும்
அலக்கழிக்கும்பீடைஇன்னம்தோணும்பாரே. (ருஅ)

இதுவுமது.

(உஅ0) தோணுமோஉலகில்உள்ளபசாசர்க்கெல்லாம்
தோணுதுபஞ்சபட்சிசூட்சம்அப்பா
காணுமோகருக்கிடையும்கருமானந்தான்
கருணைவைத்துஆசானேகாட்டவேண்டும்
பேணவேமனதுறுதிஆகவேண்டும்
பிசகினால்பஞ்சபட்சிபிசகிப்போகும்
ஆணவேஅட்சரங்கள்அறியவேண்டும்
அறிவதென்றால்அரிதாகும்உரைப்பேன்ஊனே. (ருகூ)

பிணிப்படலம்-முற்றிற்று.

---

## யாத்திரைப்படலம்.

---

யாத்திரைக்குஊண்காலபலன்.

(உஅக) ஊண்அதிலேவழிப்பயணம்புறப்பட்டால்தான்
உத்தமனேஉடலில்ஒருபிணியும்இல்லை
தோணவேபோஜனங்கள்வர்க்கவகைஉண்டு
சொல்லரியதோழருடன்பிறபுஉறவாகும்
தாணுவாய்தன்னிடத்திற்பொருளுடைமைசேரும்
சஞ்சலங்கள்மனத்திற்குச்சற்றும்இல்லை
மாண்புடையஅரசன்தான்சத்துருவேஆனால்
வழிநடையில்துயரம்மெத்தவழுத்தலாமே. (க)

இதுவுமது.

(உஅஉ) வழுத்தவேஉடல்தனக்குவருத்தம்உண்டாம்
வகையானபோஜனங்கள்வாய்த்திடாது

கொளுத்துமோர்சிலுகுசண்டைகளவுஆகும்
கொடுமையாய்உறவினரை அகற்றிவைப்பான்
தழைத்ததோர்மனத்திற்குளவளவேனும்
சந்தோஷம்சலனம்அல்லால்சற்றும்இல்லை
கழித்ததோர்சத்துருவின்வலிதாகாது
துணையானமித்துருவின்வலிதுநன்றே. (௨)

யாத்திரைக்கு நடைகாலபலன்.

(௨௮௩)நன்றல்லநடையிலேபோகொண்ணாது
நடந்தலைவதல்லாதுமற்றொன்றில்லை
பண்டுறவாய்இருந்தவரும்பகைவர்ஆவர்
பசிநேரம்பொசிக்கும்அந்தப்பலனும்இல்லை
வண்டமரும்கூந்தல்நல்லார்சேர்வும்இல்லை
வழக்குகளிற்சென்றாலும்வெல்வதில்லை
கொண்டமனையாட்டியுடன்கொடுமைமெத்த
கூற்றன்என்றசத்துருவூண்அரசாகாதே. (௩)

இதுவுமது.

(௨௮௪)அரசனாய்மித்துருதான்இருந்தால்நன்று
அலைந்தாலும்பொசிப்புக்குஇனம்உண்டாகும்
சிரசரியவந்ததொருபீடைதன்னை
சிலுகுதன்னைநீக்கிவைப்பான்க்ஷணத்திலேதான்
சாசம்இல்லைஉறவதனிற்சொற்பலாபம்
சரீரத்திற்பிணிவந்துதானேநீங்கும்
பரிசம்என்றமணம்அதுதான்செய்யொண்ணாது
பகைவந்துஒருபோதும்வாழார்பாரோ. (௪)

யாத்திரைக்குஅரசின்காலபலன்.

(௨௮௫)வாழ்வானஅரசதனிற்பயணம்ஆனால்
மனத்திற்குளவளவெனும்பீடைஇல்லை
கேளிராம்உறவினர்கள்அநந்தகோடி
கெடியானபோகபோக்கியங்கள்உண்டாம்
மாளாதசத்ருகளின்வழக்கும்வெல்லும்
மணம்செய்யநன்றாகப்பெருகிவாழ்வார்
ஏழ்மைஇல்லாப்பொருளுடன்வஸ்திரங்கள்உண்டு
இன்பமும்உண்டாசனிடஇணக்கம்பாரே. (௫)

இதுவுமது.

(உ௮௬) பாரடா சொன்னதில் ஓர் பழுதும் இல்லை
பகை இல்லை பகைத்த பேர் ஜெயிப்பதில்லை
சேரடா பிறபு உறவாகும் பாரு
சேர்க்கையுமோ மெத்த உண்டு மனமகிழ்ச்சி உண்டு
ஆரடா அரசனைத் தான் வெல்லப்போனூர்
ஆராலும் கூடாது சுகம் அதிகம் ஆகும்
நேரடா சத்துருதான் இல்லாட்டாலே
நேர்ந்தபடி வெல்லும் இது திண்ணம்தானே. (௬)

யாத்திரைக்குநித்திரைக்காலபலன்.

(உ௮௭) திண்ணம் அதாம் நித்திரையிற் செல்லொண்ணாது
தீராநோய் வரும் உண்ணல் திண்ணல் இல்லை
வண்ணம் அதாம் முன் உறவும் பகையதாகும்
வழக்குகளிற் சென்றாலும் சேதம் ஆகும்
கண்ணனுமாய் இருந்தாலும் வராது கண்டாய்
கடினம் அடா போனவர்கள் மீளார் மீளார்
முன்னமே பட்சி அது உறங்கிற்றையோ
மூடர்களே சத்துருவூண் அரசாகாதே. (௭)

இதுவுமது.

(உ௮௮) அரசாகில் சத்துருதான் கொடுமைமெத்த
அலக்கழிப்பான் மனம் புண்ணாய் நோகச்செய்வான்
சுரமான சூடுகொண்டு உடலும் காந்தி
சுழல்வண்டு சுழல்வது போல் துன்பம் மெத்த
பரமான ஆபத்துக்களும் ஆகிப்
பகைத்தவர்கள் நகைத்திடவே பழிகள் செய்வான்
சரமான பிரசண்டவாய்வுக்குள்ளே
சருகதுவும் பாம்பின் வாய்த் தவளை ஆமே. (௮)

யாத்திரைக்கு மரணகாலபலன்.

(உ௮௯) தவளையடா மரணத்திற் பயணம் ஆனல்
சத்துருதான் ஊண் அரசதாகி நின்றால்
கவலை என்ன இனிமேலும் சாவு திண்ணம்
கைப்பொருள் போம் மற்றொருவர் உதவி இல்லை
சவலையைப்போல் மனம் கொதித்து நோகும் புண்ணாய்
சண்டாளசத்துருவின் பகை ஆகாது

சிவன்சொல்லமுனிவர்சொன்ன திதப்பாது
சென்றவர்கள்திரும்பிவரமாட்டார்பாரே. (௯)

இதுவுமது.

(௨௬0)மாட்டாதமரணத்தில்மித்ருவலிதானால்
மனம்நினைத்துப்போனதுபோல்வருவதில்லை
தேட்டமாம்பொருளதுகைச்சிக்கிடாது
சிந்தைநொந்துபுண்ணுகிச்செடலம்நோயாம்
பாட்டிலேமனம்துயரப்பட்டுநொந்து
பதறுவதும்அல்லாமற்பழிவந்தெய்தும்
நீட்டியதோர்மரணத்தில்யாதொருகாரியமும்
நினைத்தாலும்நிலைத்தில்ஆகாதுபாரே. (௰)

பொதுவிதி சிறப்புவிதி-௨-ற்கும் வரலாறு.

(௨௬௧)ஆகாதேனதும்குறுக்கிதெளிவாய்ச்சொன்னேன்
அப்பனேபகல்ஒன்றுஜாமமம்அஞ்சி
நோகாது அதைக்குறுக்கிநாழிகையாய்ச்சொன்னேன்
நுணுக்கம்ஆய்விநாடியிலேநுவலக்கேளு
வாகாகவகைவிபரம்ஆகத்தானே
வளமாகப்பார்த்தறிந்துவரிசைஅக
வேகாதபொருள்போலஞானமார்க்கம்
விள்ளாமல்விள்ளும்அடாஊணைக்கேளே. (௰௧)

சிறப்புவிதி.

யாத்திரைக்குஊண்காலமுதல்விநாடியின்பலன்.

(௨௬௨)ஊண்காலம்அதனில்முதல்விநாடிதன்னில்
ஊர்ப்பயணம்யாவரொனும்போவாராகில்
சேனைரியபட்சணமும்பாற்சோறுண்டு
திரவியங்கள்உண்டுபெரிஜெனங்கள்உண்டு
மாணரியமன்னர்உறவாகும்பாரு
மழைஉண்டுமங்களசோபனங்கள்உண்டு
வேணபடிநினைத்தகாரியங்கள்கூடும்
மீளவும்பிணிவருவதில்லைப்பாரே. (௧௨)

யாத்திரைக்குஊண்கால-௨-ஆம்விநாடியின்பலன்.

(௨௬௩)பிணியில்லைஊண்இரண்டாம்விநாடிதன்னில்
பிரயாணம்செயில்நினைத்ததெல்லாம்ஆகும்
கனிவர்க்கம்போஜனவர்க்கங்கள்உண்டு
கலந்துறவாம்சோபனங்கள்கடுகிக்கூடும்

வணிகம்எனும்வாணிபம்ஆம்மகிழ்வுமெத்த
வழிநடையில்அணிஉண்டுஆடைஉண்டு
தனிஆனஅரசுமித்ருஆகநின்றால்
தானடத்தும்காரியம்தான்சொல்ஒண்ணாதே. (௧௩)

யாத்திரைக்குஊண்கால-௩-ஆம்விநாடியின்பலன்.

(உ௬௪) சொல்ஒண்ணாதாண்மூன்றாம்விநாடிதன்னில்
தூரதூரம்பிரயாணம்போவார்ஆகில்
கல்லனையமனத்துயரம்சற்றும்இல்லை
கண்டவர்கள்வெகுஉறவாய்க்கலந்துகொள்வார்
தொல்லைஇல்லைபோஜனத்திற்குறைஒன்றில்லை
ஸ்தூலம்அதிற்பிணியில்லைபகைகள்இல்லை
அல்லல்தரும்அரசுசத்ருஆகநின்றால்
அடுத்தவர்கள்பகைஉண்டுசோரம்ஆமே. (௧௪)

யாத்திரைக்குஊண்கால-௪-ஆம்விநாடியின்பலன்.

(உ௬௫) சோரம்இல்லைஊண்அதில்நான்காம்விநாடி
துணிந்தேகில்துணைஉண்டுதோகைஉண்டு
சாரம்என்றபொருள்உண்டுசம்பத்துண்டு
சகலஜனகூட்டுறவும்மணமும்உண்டு
காரமென்றபந்துக்களின்சேர்க்கைஉண்டு
கலங்காதேஒருபோதும்கலக்கம்இல்லை
வீரன்என்றவேந்தனிடப்பகைஆகாது
வேந்தனிடப்பகைமிகவும்துயரம்ஆமே. (௧௫)

யாத்திரைக்குஊண்கால-௫-ஆம்விநாடியின்பலன்.

(உ௬௬) துயரம்ஊண்ஐந்தாம்விநாடிதன்னில்
தூரதூரம்பிரயாணம்தொடர்ந்துபோகில்
சயமானவழிஅதனிற்பகைகள்உண்டு
தடைஉண்டுமனத்தடங்காஇடர்கள்உண்டு
கயமானஒருத்தர்உறவாகும்பாரு
கலந்ததினால்வரும்பீடைகழன்றுபோகும்
பயிரானஅரசுபகைஇருந்தால்மோசம்
பணியார்கள்பிறர்ஒருத்தர்பாசத்தோரே. (௧௬)

இதுவுமது.

(உ௬௭) பாசம்என்றஅரசுபகைஇருந்தால்மோசம்
பழிவருமேவழிநடையிற்களவுபோகும்

விசிநின் றபிணிஉண்டுஅரசுபகைஉண்டு
மேலானமனுஉலவிஇல்லைஇல்லை
தாசியரிற்பிறஜெனங்கள்சல்லியமேசெய்வர்
தனதாகஇருந்தவரும்பேசார்பேசார்
மோசமென்றுதிசைநோக்கிவருவான்மூங்கை
மொய்குழலாள்பூமடந்தைஉதவிஇல்லைபாரே. (௧௭)

யாத்திரைக்குநடைக்காலமுதல் விநாடியின்பலன்.

(௨௯௮) உதவிஇல்லாநடைமுதலாம்விநாடிதன்னில்
உத்தமனேஊர்ப்பயணம்போவாராகில்
சதியாகவிண்ணடையாய்நடத்திக்கொல்லும்
தன்மைஉள்ளமனுஉதவிஇல்லைஇல்லை
சதுவியதோர்சுகபோகம்தானும்இல்லை
களவுபோம்பெண்பகைபாற்கலகம்ஆகும்
பதம்ஆவதொருபோதும்வருவதில்லை
பழிகாரனுண்அரசின்பகைஆகாதே. (௧௮)

யாத்திரைக்குநடைக்கால-௨-ஆம்விநாடியின்பலன்.

(௨௯௯) பகையானநடைஇரண்டாம்விநாடிதன்னில்
பார்தனிலேஊர்ப்பயணம்நடக்கொண்ணாது
தொகையானபோசனத்தால்துயரம்ஆகும்
துணைஒருவர்உதவியில்லைகாவில்நோயாம்
வகையானபொருள்கூடும்களவுபோகும்
மன்னரால்தண்டிக்கவருமேஅப்பா
தகையானபோசனத்தில்மித்துருவேஆனால்
ஜனஉதவிகொஞ்சம்உண்டாம்தண்மைபாரே. (௧௯)

யாத்திரைக்குநடைக்கால-௩-ஆம் விநாடியின்பலன்.

(௩௰) தண்மையென்றநடைமூன்றும்விநாடிதன்னில்
தனச்சேதம்உயிர்க்குதவிதானேஇல்லை
உண்மைஎன்றமித்துருவுஞ்சத்துருவாய்எதிர்ப்பன்
உலகத்தில்துணையிவனுக்கொருவர்இல்லை
வண்மையென்றதந்தைமனம்வெறுத்துப்போகும்
வழிநடையில்வெகுதுயரம்வருகும்பாரு
திண்மைஎன்றசத்துருஊண்அரசன்ஆனால்
தீவினைகள்மெத்தஉண்டுசீரழிப்பான்தானே. (௨௰)

யாத்திரைக்குநடைக்கால்-௪-ஆம்விநாடியின்பலன்.

(௩௱௧)சீரழிவாம்நடைநான்காம்விநாடிதன்னில்
திரமாகஊர்ப்பயணம்செல்வார்ஆகில்
கோரணிக்குஉள்ளாகிவிதிவசத்தைநொந்து
கொடும்துயரால்புண்ணாகிக்குமுறுவான்பார்
தாரணியிற்சத்துருஊண்அரசாகாது
சண்டாளர்கொடுமைமெத்ததயங்கச்செய்வான்
தேரும்இந்தஇருவர்களும்மித்துருவாய்நின்றால்
ஜெயம்உண்டுபிறர்உதவிசெய்வார்பாரே. (௨௧)

யாத்திரைக்குநடைக்கால்-௫-ஆம் விநாடியின்பலன்.

(௩௱௨)செய்ததொருநடைஐந்தாம்விநாடிதன்னில்
சேர்ந்திருவர்தங்களிலேமித்துருஆனால்
நொய்துமனம்புண்ணாகித்தெளிவும்ஆகும்
நொடிக்குள்ளேமனமகிழ்ச்சிநுவலல்ஆகும்
எய்திவரில்அரசுஉறவானால்அப்பா
என்மக்காள்வெகுசுகங்கள்எய்தும்பாரு
தையலர்கள்உறவாகும்சந்தோஷம்உண்டு
தயவானஅரசுஉறவாகும்காலே. (௨௨)

யாத்திரைக்குஅரசுகால முதல்விநாடியின்பலன்

(௩௱௩)உறவாகும்அரசதிலேமுதல்விநாடி
உத்தமனேபிறதேசம்போகநன்று
நிறைவானசொல்உண்டுவரத்தும்உண்டு
நினைத்தபடிசுகம்உண்டுஉதவிஉண்டு
குறைவானகாரியங்கள்வருவதில்லை
கூடிவரும்பரிஜெனங்கள்அரசர்உறவாகும்
பரவும்ஒருமணம்உண்டுபகையேஇல்லை
பகையானபேர்களும்வந்துறவாவாரே. (௨௩)

யாத்திரைக்குஅரசுகால-௨-ஆம் விநாடியின்பலன்.

(௩௱௪)பாரானஅரசிரண்டாம்விநாடிதன்னில்
பரிவாகப்பிறதேசம்பயணம்ஆகில்
நேரானதடையில்லைதுயரம்இல்லை
நினைத்தபடிமுடிப்பதற்குப்பிறபுவுறவாவன்
காரானமனமகிழ்ச்சிஅதிகம்உண்டாம்
கண்கொள்ளாகாட்சிகளிற்களிக்கல்ஆகும்

தோரானபூமிதனம்கைவசமேசேரும்
செல்வம்அதுசெப்பஎன்றால்அடங்காதே. (௨௪)

யாத்திரைக்கு அரசுகால-௩-ஆம்விநாடியின்பலன்

(௩௱௫) அடங்காதஅரசுமூன்றும்விநாடி
அப்பனேபயணம்தான்ஆவார்ஆகில்
தடங்காணும்உதவியினால்சுகங்கள்உண்டு
சண்டாளசத்துருக்கள்இல்லைஇல்லை
மடங்காதவாழ்வென்றால்மதிக்கப்போமோ
மன்னர்உறவாகும்மனமகிழ்ச்சிஉண்டாம்
ஒடுங்காதபூபாதுதுணைதான்உண்டு
உரைக்கஒண்ணாதிவன்வாழ்வுஉரைக்கஎன்றால்அரிதே. (௨௫)

யாத்திரைக்கு அரசுகால-௪-ஆம்விநாடியின்பலன்

(௩௱௬) அரிதானஅரசுநான்காம்விநாடி
அப்பனேகங்குகரைஇல்லைசெல்வம்
பெரிதானஇடங்களிலேமணம்சேர்க்கைஉண்டு
பின்தொடரும்ஆண்குழந்தைபிரபலமேஆகும்
சரியானபொருள்வரத்துஉண்டாம்மேலும்
சவுக்கியம்என்றசுகபோகம்சுத்தம்உண்டு
குறியானஇவன்தன்குலம்ஈடேறும்
குவலயத்தில்வுண்டாகும்வெகுவுதவிபாரே. (௨௬)

யாத்திரைக்கு அரசுகால-௫-ஆம்விநாடியின்பலன்

(௩௱௭) உதவிஎன்றஅரசுஐந்தாம்விநாடிதன்னில்
வுத்தமனேஎத்தொழிலும்செய்யநன்று
பதவிஎன்றகாயசித்தியோகசித்தி
பண்பானஞானசித்திமந்திரசித்தி
சதமாகநினைத்ததுகைவசமேஆகும்
சண்டாளநேரம்அங்கேதரிப்பதரிதாகும்
அதமம்என்றசொல்போச்சுவுத்தமம்தான்ஆச்சு
அப்பனேஇவ்வேளைவாய்ப்பதரிதாமே. (௨௭)

யாத்திரைக்குநித்திரைக்கால முதல்விநாடியின்பலன்

(௩௱௮) அரிதென்றவுறக்கத்தின்முதல்விநாடி
அப்பனேபிறதேசப்போகும்காலம்
சரிஎன்றதன்வுயிர்தான்தவிக்கும்பாரு
தயங்காதமனம்கூடத்தவித்துப்போகும்

வீரிகின்றஐம்புலனும்துயரப்பட்டே
மெலிவதல்லால்சுகம்ஒன்றும்இல்லைஇல்லை
அறிகின்றபரிஜெனங்கள்இல்லைஇல்லை
அப்பனேசண்டாளநேரம்தானே. (௨௮)

யாத்திரைக்குநித்திரைக்கால-௨-ஆம்விநாடியின்பலன்

(௩௱௯)நேரானவுறக்கம்இரண்டாம்விநாடி
நினைத்திட்டகாரியங்கள்வசப்படாது
கூரானசரீரத்திற்பிணிதான்வந்து
கூற்றுவன்போலவுடல்வுயிரைக்கொடுமைசெய்யும்
பாரானசண்டாளர்பகைதான்மெத்த
பகைத்ததினால்வெகுகொடுமைபழிகள்சூழும்
ஆரணியும்சிவன்கிருபைஅகிலநிற்கும்
அவன்சடலம்துயரத்தால்அழியும்பாரே. (௨௯)

யாத்திரைக்கு நித்திரைக்கால-௩-ஆம்விநாடியின்பலன்

(௩௱௰)அழுந்துகின்றவுறக்கம்மூன்றும்விநாடி
அப்பனேபிரயாணம்ஆவார்ஆகில்
கொழுந்துபோம்மனுவுதவிஇல்லாமல்தான்
கொள்ளையும்ஆம்வெள்ளத்தில்அவதிஆகும்
கழிந்துபோம்சடலம்உருவாவதில்லை
கண்டவர்கள்இவனுடனேகலந்துறவேயில்லை
அழிந்துபோம்உயிர்ச்சேதம்ஆகும்மைந்தா
அப்பனேஇவன்துயரம்தீர்வதரிதாமே. (௩௰)

யாத்திரைக்கு நித்திரைக்கால-௪-ஆம்விநாடியின்பலன்

(௩௧௧)அரிதானஉறக்கம்நான்காம்விநாடி
அப்பனேவழிப்பயணம்போகொண்ணாது
விரிவானவழியிடையில்சஞ்சலத்தால்ஐயா
வெகுதுயரம்வந்திடும்பார்விஷதிஷ்டிஉண்டாம்
குறைவானகாலம்என்றுபிறஜனங்கள்பேசும்
கூடினபேர்புறப்பட்டநேரம்என்பார்
சரியானவேளைஅல்லசண்டாளவேளை
தன்மைஉள்ளமித்ருஅரசாகில்நன்றே. (௩௧)

யாத்திரைக்கு நித்திரைக்கால-௫-ஆம்விநாடியின்பலன்

(௩௧௨)நன்றிஇல்லாஉறக்கம்ஐந்தாம்விநாடிதன்னில்
நாட்டிலேபயணம்வந்துபோவார்ஆகில்

குன்றென்றமுனைமுகத்திற்போனாற்போல
கொடுமையாம்உயிர்சேதம்வருமேதின்னம்
மன்றென்றவிஷதிஆடியாலேசாவான்
மக்களைசோரனால்சாவும்உண்டு
கன்னென்றபெண்ணாறவால்உயிர்தான்சேதம்
கடினம்அவன்திரும்புவதிங்கில்லைப்பாரே. (௩௨)

யாத்திரைக்குமாணகால முதல்விநாடியின்பலன்

(௩௩௩) இல்லையென்றமரணம்முதல்விநாடிதன்னில்
என்மகனேஊர்ப்பயணம்போகொண்ணாது
தொல்லைஅடாபோனவர்கள்திரும்பார்மைந்தா
தோனாமல்உயிர்தவிப்பார்துணைஇல்லாமல்
சல்லியமாம்சோரர்தன்னால்உயிரும்சேதம்
சண்டாளஉயிர்க்கெவர்தான்ஆவார்கள்
கொல்லும்அடாஅண்டினபேர்தமையுங்கூட
கொடுமைஉள்ளநாட்பயணம்ஆகாதாமே. (௩௩)

யாத்திரைக்கு மாணகால-௨-ஆம்விநாடியின்பலன்

(௩௩௪) ஆகாதமரணம்இரண்டாம்விநாடிதன்னில்
அப்பனேபுறப்பட்டால்உயிர்ச்சேதம்ஆகும்
வேகாதுவெந்துமனம்புண்ணாய்நோகும்
வேறுபட்டஅன்றிலைப்போல்துன்பம்எய்தும்
சாகாதபிணம்போலஉயிர்தவித்து
தனக்கொருத்தர்துணைஇன்றிவாடாநிற்பன்
நோகாமல்போவதில்லைபழிபகைகள்வருமே
நோவதுதான்மெத்தஉண்டுநொந்துவிடும்மனமே. (௩௪)

யாத்திரைக்குமாணகால-௩-ஆம்விநாடியின்பலன்

(௩௩௫) மனம்என்றமரணம்மூன்றும்விநாடி
வழிப்பயணம்தான்போகில்மாணம்ஆவார்
இனம்என்றசனச்சேதம்தனமும்சேதம்
என்மக்காள்உடலில்வந்தபிணிதீராது
சனம்என்றஅவர்இருந்தும்உதவிஇல்லை
சண்டாளர்அவர்களும்தான்சத்ருஆவார்
கனம்என்றமித்ருஅரசாகநின்றால்
கருதவேபிறர்உதவிசெய்வார்பாரே. (௩௫)

யாத்திரைக்கு மரணகால-௪-ஆம்விநாடியின்பலன்

(௯௧௬) பாரானமரணம்நான்காம்விநாடி
பயணம்அதாய்ப்புறப்பட்டால்மரணம்எய்தும்
வேறொருவர்துணைஇல்லைவிதைத்தால்மாய்வான்
விஷங்கொண்டகானகத்தில்மிருவதைஆகும்
சோரம்என்றசோரர்களால்களவும்உண்டு
தொலையாதஇடைஞ்சல்வந்துதோணும்பாரு
கூறுனகூற்றுவனேதுணைஆகநின்று
சொல்வன்என்றுகும்பமுனிசொன்னார்அன்றே. (௯௬)

யாத்திரைக்குமரணகால-௫-ஆம்விநாடியின்பலன்

(௯௧௭) சொன்னதொருமரணம்ஐந்தாம்விநாடிதன்னில்
துலைதூரம்பிரயாணம்செய்வார்ஆகில்
தன்னாலேஉயிர்தவிக்கும்மனம்புண்ணாகும்
சண்டாளனேரம்அதுதலைஎடுக்கொட்டாது
கொன்றுடும்கூற்றுவன்தான்பிடரிஏறிக்
கொன்றிடவேநின்றிடுவன்கொக்கரித்து
சன்னாசிஆக்கிவிடும்இதுபொய்யல்ல
தத்தளித்துநெஞ்சம்அதுதவிக்கும்பாரே. (௯௭)

இதுவுமது.

(௯௧௮) தவிக்கவேவேண்டாம்நீபட்சிபகைநீக்கி
தனதானமிக்தருவிற்செய்தாயானால்
குவிக்கவேஎத்தொழிலும்கூடும்பாரு
குணம்குறிகள்நிலைஅறிந்துகூறல்ஆகும்
தவிக்காமல்சகலகலைவல்லபம்உண்டாம்
தான்அறிந்தால்அவன்யோகிஅவனேசித்தன்
துலக்கமாய்யாத்திரையைச்சொன்னோம்இன்னம்
தொல்புவிமேல்மனைக்கோலல்சொல்லுவோமே. (௯௮)

யாத்திரைப்படலம்-முற்றிற்று.

---

## மனைப்படலம்.

---

மனைக்கோலுதற்கு ஊண்கால முதலாம் விநாடி
௨-ஆம்விநாடிகளின்பலன்

(௯௪௧) சொல்லுகிறேன்ஊண்முதலாம்விநாடிதன்னில்
துதியாகமனைமுகூர்த்தம்செய்வார்ஆகில்

வெல்லுகிறேன்மூன்றாறுவருஷம்தானும்
மேல்மேலும்சுகம்ஆகவாழ்ந்திருப்பர்
தொல்லையொன்றும்இல்லைஅடாவிநாடிமொண்டில்
சுகமாகஇருநூற்றுஅன்பதாண்டு
சல்லியம்ஒன்றில்லாமல்வாழ்ந்திருப்பர்
தனபதிக்கும்அதிகம்அதாம்வாழ்வுண்டாமே. (௧)

மனைக்கோலுதற்கு ஊண்கால-௩-ஆம்விநாடி
௪—ஆம் விநாடிகளின்பலன்

(௩௨௰) வாழலாம்ஊண்மூன்றும்விநாடிதன்னில்
மக்களேஇருநூறுவருஷம்தானும்
கோள்ஆனதொன்றும்இல்லைசெல்வம்மிச்சம்
கோத்திரங்கள்குறைவின்றிவாழல்ஆகும்
வேளானநான்காம்விநாடிதன்னில்
வீடுசெயில்வருஷம்ஒருபதினெட்டுபத்து
கோள்ஆனகுடிதழைத்துவாழும்பாரு
கூர்மையுடன்வாழ்ந்திருப்பர்நன்மைதானே. (௨)

மனைக்கோலுதற்கு ஊண்கால—௫-ஆம்விநாடியின்பலன்

(௩௨௧) நன்மையென்றஊண்ஐந்தாம்விநாடிதன்னில்
நலமாகவாழ்ந்திருப்பர்பதினைந்துபத்து
செம்மையுடன்அவ்விடத்திற்சோபனங்கள்கூடும்
தினந்தோறும்போஜனத்தில்சிறுமைஇல்லை
துன்மைஇன்றிப்பால்பசுக்கள்கட்டிவாழும்
தூயவஸ்திரபூஷணங்கள்அதிகம்ஆகும்
தின்மைஎன்றஎச்செயலும்வருவதில்லை
செயமாகவாழ்ந்திருப்பார்திண்ணம்தானே. (௩)

மனைகோலுதற்கு நடைக்காலமுதல்விநாடி
௨—ஆம்விநாடிகளின்பலன்

(௩௨௨) திண்ணம்அடாநடைதனிலேமுதல்விநாடி
செய்தக்கால்மனைமுகூர்த்தம்வருஷம்நூறு
எண்ணம்அடாவாழ்வுசுகம்அதிகம்இல்லை
என்மகனேவாழ்ந்திருப்பார்சுகம்அதாக
கன்னஇடும்களவிதிலேபோகும்பாரு
கலங்குமேமனதுபின்புதெளிவும்ஆகும்
சொன்னேன்அடாஇரண்டாம்விநாடிதன்னில்
தொடுத்தமனைதொண்ணூறுவருஷம்தானே. (௪)

மனைக்கோலுதற்குநடைக்கால-௩-ஆம்விநாடியின்பலன்

(௩௨௩) தொண்ணூறுவருஷம்இதில்சுகமும்துக்கம்
தொடுத்திடுமேவாழ்வுமணம்சுறுக்கம்ஆக
எண்ணரிநடைமூன்றாம்விநாடிதன்னில்
எடுத்தமனைவருஷம்அதற்கெண்பதாகும்
கண்ணூறுமெத்தவுண்டுகளவுபோகும்
கட்டியதோர்வருஷம்ஒருமுப்பதுக்குள்
பொன்னூறுதண்டம்உண்டுதீக்கோள்உண்டு
பொல்லாதமனிதன்என்றுசொல்லுவாரே. (௩)

மனைக்கோலுதற்கு நடைக்கால-௪-ஆம்விநாடியின்பலன்

(௩௨௪) சொல்லுவோம்நடைநான்காம்விநாடிதன்னில்
தொடுத்தமனைஎழுபத்துவருஷம்தானும்
சல்லியம்தான்ஒழிந்ததில்லைதுன்பம்மெத்த
சண்டையுடன்வெகுகொடுமைசங்கொண்ணாது
தொல்லையாய்அரசனிடப்பகையும்சூழும்
துன்பமுடன்தெண்டனையும்அதிகம்உண்டாம்
அல்லலாய்அந்தமனைகொஞ்சநாளில்
அடைபடுமேதீபமும்தான்அரிதாம்பாரே. (௪)

மனைக்கோலுதற்கு நடைக்கால்-௫-ஆம்விநாடியின்பலன்

(௩௨௫) அரிதாகும்நடைஐந்தாம்விநாடிதன்னில்
அகம்எடுக்கவருஷம்அது அறுபதாகும்
குறியாகஅந்தமனைவாழ்வுகொஞ்சம்
கொண்டபெண்டிர்சேதமும்ஆம்செல்வமில்லை
எரியாகும்நன்மைஎன்றகாரியங்கள்
எடுக்கமனம்ஒட்டாதுஇடைஞ்சல்ஆகும்
சரியானசடலத்தில்நோய்உண்டாகும்
சண்டாளசத்துருவின்பகைஆகாதே. (௫)

மனைக்கோலுதற்கு அரசுகாலமுதல்விநாடியின்பலன்

(௩௨௬) ஆகுமேஅரசுமுதல்விநாடிதன்னில்
அப்பனேமனைமுகூர்த்தம்செய்வாராகில்
ஏகுமேவருஷம்அதுஆயிரந்தான்
என்னசொல்வேன்வாழ்வதென்றால்சொல்லொண்ணாது
சேகரமாம்மனைக்குதிரைகட்டல்ஆகும்
சிவிகைதனிலேறுதற்குயோகம்ஆகும்

வாசானவாழ்வுமனைச்செய்யல்ஆகும்
மங்களமாய்தான்இருந்துவாழுந்தானே. (அ)

மனைக்கோலுதற்கு அரசுகால-௨-ஆம்விநாடியின்பலன்

(௩௨௭)வாழுமேஅரசிரண்டாம்விநாடிதன்னில்
வருஷம்அதுஎண்ணூறுமகிழ்ந்தசெல்வம்
ஆறுமேசுகபோகம்அதிகம்ஆக
அப்பனேமங்களமாய்இருந்துவாழும்
சேனுநீஅரசர்உறவாகும்பாரு
செதிபெறவேமனுக்கூட்டம்ஜனச்சேர்க்கைமிச்சம்
நாளானஅந்தமனைஎப்போதும்தான்
நலமானலட்சுமியாள்வாசம்ஆமே. (௯)

மனைக்கோலுதற்கு அரசுகால-௩-ம்விநாடியின்பலன்

(௩௨௮)வாசம்அடாஅரசமூன்றும்விநாடிதன்னில்
வருஷம்அதுஅறுநூறுமகிழ்ச்சிஆகும்
நேசம்அடாஅரசரும்வந்திருப்பார்பாரு
நேர்மைஉள்ளபரபுவினிடநேசம்ஆகும்
தேசம்அடாவெகுதூரம்பேருண்டாகும்
திருவென்றபொருளுடைமைகைவசமேஆகும்
பாசம்அடாஅரசுநிகர்மனைக்குவாசல்
பரிவாகத்தானிருந்துவாழும்பாரே. (௰)

மனைக்கோலுதற்கு அரசுகால-௪-ஆம்விநாடியின்பலன்

(௩௨௯)பாரில்உயர்அரசுநான்காம்விநாடி
பதிஎடுக்கில்வருஷம்தான்நூற்றைம்பதாகும்
நேருகின்றவாழ்வதிகம்செல்வம்என்றால்
நிருபதிக்கும்அதிகம்அதாம்மதிகொண்ணாது
கோருகின்றகுலம்கிளைகள்செல்வம்ஆகும்
கொண்டாடிவெகுஜனங்கள்கூட்டம்ஆகும்
ஏறுகின்றபரிஎறிநடப்பன்அல்லால்
என்மகனேகால்நடையாய்த்திரியான்தானே. (௰௧)

மனைக்கோலுதற்குஅரசுகால-ரு-ஆம்விநாடியின்பலன்

(௩௩௰)தானென்றஅரசுஐந்தாம்விநாடிதன்னில்
தனதானமனைமுகூர்த்தம்செய்வார்ஆகில்
தேனென்றவருஷம்அதுநானூறாகும்
செல்வம்என்றால்நாவினால்சொல்லொண்ணாது

மானென்றவிழிமடவார்சேர்க்கைமிச்சம்
வந்திடுமேபொருளுடமைகைவசம்அரசு
ஏனென்றசத்துருவேஇல்லைஇல்லை
என்மகனேதீமைஒன்றும்இல்லைத்தானே. (௧௨)

மனைக்கோலுதற்குநித்திரைக்காலமுதல்விநாடியின்பலன்

(௩.௩.௧) இல்லைஎன்றஉறக்கம்முதல்விநாடிதன்னில்
என்மகனேமனைமுகூர்த்தம்செய்வாராகில்
கொள்ளையேபோகும்அப்போஅக்கினியால்வாதை
கூடிவர்மாட்டாதுஒருசுகமும்இல்லை
சள்ளைஎன்றபிள்ளைஇல்லைமனுவுதவிஇல்லை
சூதணநேரம்ஆகிலும்சந்தோஷம்இல்லை
தொல்லையடாவருஷம்ஒருஅன்பதுக்குள்
துன்பம்மெத்தஉண்டாகும்சொல்லொண்ணாதே. (௧௩)

மனைக்கோலுதற்குநித்திரைக்கால-௨-ஆம்விநாடியின்பலன்

(௩.௩.௨) ஒண்ணாதஉறக்கம்ரெண்டாம்விநாடிதன்னில்
உத்தமனேமனைமுகூர்த்தம்செய்வாயானால்
தன்னாலேஅழிந்துவிடும்நாற்பதுக்குள்
தணல்என்றதணல்அதனால்வாதைஆகும்
எண்ணாதேமனுவுதவிஇல்லைஇல்லை
இல்லறத்தில்சுகம்இல்லைநோய்உண்டாகும்
கண்ணாதநெஞ்சதுவும்கண்ணும்பாரு
கலந்திடுமேமூதேவிவாசம்தானே. (௧௪)

மனைக்கோலுதற்குநித்திரைக்கால-௩-ஆம்விநாடியின்பலன்

(௩.௩.௩) வாசமாம்உறக்கம்மூன்றாம்விநாடி
மக்களேமனைமுகூர்த்தம்செய்வாராகில்
பாசமாம்வருஷம்அதுமுப்பத்தைந்து
பாழ்அடையும்அல்லாதுசுகமேஇல்லை
நேசமாய்உறவில்லைபிள்ளைஇல்லை
நினைத்தகொருகாரியங்கள்நேர்வதில்லை
நாசமாம்உறக்கம்என்றவேளைதானும்
நன்மைஒருநாளும்இல்லைநாசம்தானே. (௰௫)

மனைக்கோலுதற்குநித்திரைக்கால-௪-ஆம்விநாடியின்பலன்

(௩.௩.௪) நாசம்அடாஉறக்கம்நான்காம்விநாடி
நல்லதொருமனைஎடுக்கில்முப்பதாண்டும்

தோஷம்அடாமனை அதுதான்பாழதாகும்
சொல்லொண்ணாதுயரம்அதுதோணும்தோணும்
பாசம்உள்ளஉறவில்லைபொருள்சேர்க்கையில்லை
பண்பானசுகம்இல்லைபுத்திரர்கள்இல்லை
நேசமாம்வாழ்வில்லைபசாசர்களேஆகும்
நினையாதபீடையெல்லாம்நிலைக்கும்பாரே. (௧௬)

மனைக்கோலுதற்குநித்திரைக்கால-௫-ஆம்விநாடியின்பலன்

(௩௩௫) நிலைக்கும்அடாஉறக்கம்ஐந்தாம்விநாடிதன்னில்
நேர்மைஉள்ளமனைமுகுர்த்தம்செய்வார்ஆகில்
பலிப்பதுகேள்வருஷம்ஒருஇருபதுக்குள்
பாழ்அடையும்அல்லாதுதீபம்இல்லை
துலைக்கும்அடா பிறஜெனங்கள்உதவியில்லை
துன்பம்தான்தினைஅளவும்தொலைத்திடாது
அலைக்கும்அடாமூதேவிவாசம்தானும்
அப்பனேசத்துருவின்பகைஆகாதே. (௧௭)

மனைக்கோலுதற்குமரணகாலமுதல்விநாடியின்பலன்

(௩௩௬) பகையானமரணத்தின்முதல்விநாடி
பாழாகும்வருஷம்ஒருஇருபதுக்குள்
தொகையானமித்துருதான்அரசன்ஆகில்
சொல்லியதோர்தொகைப்படிக்குத்துயரம்தோணும்
வகையானசத்துருதான்அரசன்ஆகில்
மக்களேஒருபோதும்வாழ்வதில்லை
தகையானவருஷம்ஒருஐந்துக்குள்ளே
தன்னாலேஅழிந்துமனைப்பாழாம்பாரே. (௧௮)

மனைக்கோலுதற்கு மரணகால-௨-ஆம்விநாடியின்பலன்

(௩௩௭) பாழானமரணம்இரண்டாம்விநாடி
பாலகனேமனைஅதுதான்பரிந்தெடுக்கில்
கோளானவருஷம்ஒருபத்துக்குள்ளே
குலைந்துபோம்மனைஅதனிற்குடியேஇல்லை
தேளானவிஷம்அதனால்மரணம்ஆகும்
தெண்டனையோபொருட்சேதம்துயரம்மெத்த
சூழானஅக்கினியால்வாதைஆகும்
தொல்லைக்குதற்குமனுஉதவியில்லைத்தேனே. (௧௯)

மனைக்கோலுதற்குமரணம்-௩-ஆம்விநாடியின்பலன்

(௩௩அ) இல்லையென்றமரணம்மூன்றாம்விநாடிதன்னில்
என்மகனேமனைமுகூர்த்தம்இடுவாராகில்
கொள்ளையடாவருஷம்அதுஐந்துக்குள்ளே
குடியேறல்ஒருநாளும்இல்லைஇல்லை
சள்ளையடாகோலினவன்மரணம்ஆவான்
சண்டாளநேரம்அதுகளையேறாது
தொல்லையடாஅம்மனையில்மூதேவித்தான்
சூழும்என்றுதொல்புவியேசொல்லும்பாரே. (௨௰)

மனைக்கோலுதற்கு மரணம்-௪-ஆம்விநாடியின்பலன்

(௩௩௯) சொல்லுகின்றமரணம்நான்காம்விநாடி
சொல்லியதோர்மனைதனிலேமுகூர்த்தம்செய்தால்
கொல்லுமேவருஷம்ஒருமூன்றுக்குள்ளே
குடியேறல்ஒருநாளும்இல்லைஇல்லை
வெல்லவேஇவன்அருகில்கூற்றன்நின்று
வேணபடிமனம்போலமுடித்துக்கொள்வான்
வல்லதாம்மனைமுகூர்த்தம்செய்தபோதே
வந்திடுமேமனத்துயரம்சொல்ஒண்ணாதே. (௨௧)

மனைக்கோலுதற்குமரணம்-௫-ஆம்விநாடியின்பலன்

(௩௪௰) ஒண்ணாதஅஞ்சாம்விநாடிதன்னில்
உத்தமனேமனைமுகூர்த்தம்செய்வாராகில்
எண்ணாதவருஷம்அதுஒன்றுக்குள்ளே
இறைவனும்அவன்சடலம்அழிந்துபோகும்
தன்னாலேஉயிர்ச்சேதம்ஆகும்பாரு
சண்டாளாபட்சியுடைப்பகைஇருந்தால்
விண்ணானவருஷம்அதுகுறைந்துபோகும்
மேன்மைஉள்ளசீரழிவுமெத்தஆமே. (௨௨)

மனைக்குப்பலாபலன்கூட்டும்வகை

(௩௪௧) சீரழிவுசெய்திடுமேஊணதாகில்
சீராகச்சொன்னவற்றுட்கால்வரிசைகுறையும்
மாரிழவுகொண்டிடுவன்கூறியபீடைகளில்
மக்களேகால்வரிசைதான்அதிகம்ஆகும்
கூரிழிவுசெய்திடுவான்கொடுமைமெத்த
கூடிவரமாட்டாதுபொருட்சேதம்ஆகும்

பார்ழிவுசெய்திடுவான்போஜனத்தில்உள்
பகையெல்லாம்வருமானப்பகையதாமே. (௨௩)

இதுவுமது.

(௩௪௨) பகையாதஅரசனிடப்பகையேஆனால்
பண்பாகமுன்சொன்னபலனிற்பாதி
தொகையாகும்கூறினதோர்பிசைதானும்
தொடுத்துவிடும்மூவிரட்டிஅதிகம்ஆகும்
வகையாகக்கூடிவரமாட்டாதையா
மக்களேமுன்உள்ளபொருளும்சேதம்
நகைசெய்வார்உலகத்தில்உள்ளபேர்கள்
நல்லதென்றுபார்மகளும்சிரிப்பாள்பாரே. (௨௪)

இதுவுமது.

(௩௪௩) சிரிப்பானஊண்அரசசத்துருவாய்நின்றால்
சேதமோஉயிர்ச்சேதம்பொருட்சேதம்ஆகும்
குறிப்பானமனம்நொந்துபுண்ணதாகும்
குடிகெடுத்தசத்துருவின்பகைஆகாது
மரிப்பாகும்அந்தமனைமுற்றும்பாழாம்
வருமானம்எவளவெனும்வகைசெய்யாது
தெரிப்பாரோஉலகில்உள்ளபிறஜெனங்கள்எல்லாம்
செய்வினையோஎன்றுமனம்தவிகொள்வாரே. (௨௫)

மனைக்குஆயுசுகூட்டும்வகை

(௩௪௪) தவியாதபூமிதனில்மனைகள்கோலும்
தன்வயதுசொல்லக்கேள்தண்மையாக
சுவையாகும்ஊண்அதிலேகோலும்காலம்
தொகையாகமுந்நூறுவயசேசொல்வர்
செவையானநடைதனக்குவயதுமைந்தா
திரமாகஒருநூறுசெப்பலாகும்
குவியாதுஅரசுக்குவயதுகேட்கில்
கூசாதேஆயிரம்தான்கூர்ந்துபாரே. (௨௬)

இதுவுமது.

(௩௪௫) கூர்ந்துபார்உறக்கத்தில்வயதுகொஞ்சம்
கொஞ்சமனனில்அன்பதுதான்ஆகும்பாரு
நேர்ந்துபார்மரணத்தின்வயசுநட்பம்
நிகழ்த்தஎன்றால்இருபதேனும்வருஷம்மைந்தா

சார்ந்துபார்சத்ருஊண்அரசில்லாட்டால்
தன்மையுடன்சொன்னசொல்லும்பழுதேஇல்லை
சேர்ந்துபார்மித்ருவின்வலுவுண்டாயில்
செம்மையுடன்ஒன்றுபத்தாகும்பாரே. (௨௭)

மணிப்படலம்-முற்றிற்று,

## இருதுப்படலம்.

(௩௪௬)பாரானபாவையர்தம்வாழ்வும்கேடும்
பண்புளதாட்உள்ளதுபோற்பகர்வீரென்ன
நேரானமானிடர்தான்நின்றுகேட்கில்
நீணிலத்தில்அவள்பிறந்தநாளைக்கேளு
ஆரானப்பிறந்திடும்நாள்சொல்வார்ஆகில்
அப்பனேஅதுகொண்டுசொல்லவேண்டும்
ஓரான நதுவாகும்காலம்கண்டு
உண்மையாம்அநுபோகம்ஊணும்ஊணே. (க)

ஊண்சாலஇருதுவின்பலாபலன்

(௩௪௭)ஊணென்றபட்சியிலேருதுதான்ஆகில்
ஊண்பதிலும்உடுப்பதிலும்குறைவொன்றில்லை
சேணென்றபொருள்உண்டுசெல்வம்உண்டு
செப்பொண்ணாச்செயல்உண்டுபாலும்உண்டு
மாண்யென்றவாழ்உண்டுவாகுசையுண்டு
வழியானபிள்ளைகள்மற்றெல்லாம்உண்டு
கோணென்றசிவகளைதான்அதிகம்ஆகும்
கூட்டுறவாம்மித்ருதான்அரசுநன்றே. (௨)

இதுவுமது.

(௩௪௮)நன்றானமித்ருதான்அரசன்ஆகில்
நடக்கும்அடாஇதனால்அதிகலாபம்
குன்றாதஒருபோதும்வாழ்வுதானும்
கூட்டிவைக்கும்சுகபோகம்குலமேசெல்வம்
மன்றாடும்பூங்குழலாள்ஆயுள்மட்டும்
வாழ்வுசொல்லஎவராலும்மதிக்கொண்ணாது
சென்றாடும்சத்ருவின்பகைஆகாது
சீரழிவுசெய்திடுவான்திண்ணம்தானே. (௩)

இதுவுமது

(௩௯௯) தானவனாய் இருந்தவனைப்பிரித்துவைப்பான்
தனம்பொருளைப்பவிஷுக்களைத்தவனுசெய்வான்
கோனவனென்றறியாமல்உலகத்தோர்கள்
குதித்திடுவார்ஒருதொழிலைக்குறித்துக்கொண்டு
மானனையமின்னார்கள்பூர்க்கும்காலம்
மதிவேணும்நேரம்அங்கேவாய்க்கவேண்டும்
தேனனையாள்கலியுகத்திற்கோடிக்கொன்று
திடமாகத்தான் இருந்துவாழ்வர்தானே. (௪)

நடைகாலஇருதுவின்பலாபலன்

(௩௧௦) வாழாதநடைதனிலேருதுவேஆனால்
வாழ்வில்லைசுகம்இல்லைமனுக்கட்டில்லை
மாளாதசத்துருஊண் அரசாய்நின்றால்
மற்றதொருநிவினையுட்சொல்லொண்ணாது
ஆளானமித்துருஊண் அரசன் ஆகில்
அதனுடையகொடுமையையும்அகற்றிவைப்பான்
கேளானவாழ்வுண்டுசுகமும்உண்டு
கெடியானஊண் அரசசத்ருஆகாதே. (௫)

இதுவுமது

(௩௧௧) சத்துருவாய்நின்றுக்கால்வருஷம்ஒன்றில்
தனவாழ்வுபோய்விடும்தாய்தந்தைசேதம்
செற்றுவிடும்பிறவிகள்தான்பொருளும்சேதம்
தீவினையாம்அகலாதவேசிஆவாள்
நைந்துவிடும்உடலில்நின்றுபிணிகள்தானே
நசித்துப்போம்அக்குடிதான்நாசம்ஆக
மத்திபமேஆகும்என்றுமுதல்நூல்தன்னில்
வசனித்தார்குறுமுனியும்வசனித்தாரே. (௬)

அரசகாலஇருதுவின்பலாபலன்

(௩௧௨) வசனித்தஅரசிலேருதுதான்ஆகில்
வாக்கினால்அவள்வாழ்க்கைவழுத்தொண்ணாது
அசனித்தபாக்கியம்என்னபவிஷுமென்ன
அனைவர்களும்கைகட்டிநிற்பதென்ன
நிசமித்தவாழ்வதுதான்ஆயுள்மட்டும்
நிலைக்கும்பார்மேன்மேலும்பெருகுமைந்தா

விஷமிந்தசத்துருவோ இல்லை இல்லை
விளம்பும்ஒருபோசனத்தின்சத்துருஆகாதே. (௭)

இதுவுமது.

(௩௫௩) ஆகாதபோசனத்தில்சத்துருதான்ஆனால்
அகற்றிவைப்பான்வாய்க்குரிசைஆனதெல்லாம்
நோகாதமித்துருதான்அரசன்ஆனால்
நொடிக்குள்மனம்புண்ணாகித்தெளிவுண்டாகும்
சோகமாய்க்கண்காணுக்காட்சிஆன
சொற்பனத்தின்கதைபோலத்தொலைந்துபோகும்
வேகமாம்போஜனத்தின்சத்துருதானென்ன
வேணபடிநடப்பதற்குநடுங்கும்பாரே. (௮)

நித்திரைக்காலஇருதுவின்பலாபலன்

(௩௫௪) பாரடாஉறக்கத்தில்ருதுதான்ஆகில்
பாரப்பாதென்னஅவள்உயிரோபங்கம்ஆகும்
சேரடாவாழ்வில்லைபணமும்இல்லை
ஜெகத்திலேபின்வுதவிதானும்இல்லை
ஆரடாஉதவிசெய்யநினைத்தாலும்தான்
அடிமாண்டுஇவள்உயிரும்அழிந்துபோகும்
கோரடாநினைத்ததெல்லாம்கைவசப்படாது
குறியாகஅவள்முகமும்இறங்கும்பாரே. (௯)

இதுவுமது.

(௩௫௫) இறங்குவதுவதாலேதூக்கத்தாலே
எண்ணம்என்றபிரசண்டவாய்வினாலே
இரங்குவதும்மனம்புண்ணாய்ப்போனதாலே
எடுத்ததொருகாரியங்கள்பலியாத்தாலே
உறங்குவதில்பட்சியுடைப்பகையாகாது
உற்றதுணையாரும்இல்லைஉலகத்துள்ளே
மயங்குவதுபிரமலிபிஉள்ளமட்டும்
மனுவுதவிஇல்லாமற்போகும்பாரே. (௰)

இதுவுமது.

(௩௫௬) போகாதபொருள்போகும்வாழ்வுபோகும்
புனிதனென்றசொல்போகும்தனமும்போகும்
சாகாதஉயிர்போலத்தவிக்கும்பாரு
சண்டாளசத்துருவூண்அரசன்ஆனால்

வேகாது வெந்துவிடும் பொசிப்போ இல்லை
மேதினியில் மித்துருஉண் அரசன் ஆகில்
நோகாது கனவுகண்ட காட்சியே போல
நோகாது நொந்து மனம் கலங்கும் பாரே. (௰௧)

இதுவுமது.

(௩௫௭) கலங்குவாள் ஐம்புலனும் ஒடுங்கும் மட்டும்
கண்டவர்கள் அவளுடனே கலந்து பேசார்
மலங்குவாள் தாமரையின் இலைத் தண்ணீர் போல்
வருந்துவது மெத்தஉண்டு உயிர்தான் அப்பா
நலங்குவாள் உயிர் இருந்தும் செற்ற பிணம் போல
நானிலத்தில் இவட்குதவி எவரும் இல்லை
விலங்குவாள் இவளை அறியாமல் ஐயோ
விழுந்தோமே யென்று பாதவிப்பாள் தானே. (௰௨)

இதுவுமது.

(௩௫௮) தவிப்பது தான் ஏதாலே வேளையாலே
சண்டாள சத்துருபகை ஆனதாலே
குவிப்பது போல் பொருள் ஆசை மெத்தவுண்டு
கூடிவரமாட்டாது குமுறும் நெஞ்சம்
சபிப்பது போல் சொல்வார்கள் தரணியோர்கள்
சலிப்பார்கள் பிறர் இவளுக்குதவி செய்யார்
அவிப்பது போம் உயிர் அதுதான் உள்ள மட்டும்
அலைந்தலைந்து மனம் ஜடலம் அழியும் பாரே. (௰௩)

மரணகால இருதுவின் பலாபலன்

(௩௫௯) அலைவான மரணத்தின் திரண்டாள் ஆகில்
அழிந்திடுமே வருஷம் ஒன்றில் ஜடலம் தானும்
குலையுமே அவள் பொருள் தான் மித்துருவலி தானால்
குடிகெடுத்த சத்துருவலி தாகும் ஆகில்
கலையுமே மாசம் ஒரு மூன்றுக்குள்ளே
கடினம் அடா குடிவாழ்க்கை கடைத்தேறாது
இலைபோல நாளுக்கு நாள் தான் தேய்ந்து
இவள் உயிர் தான் இவ்வுலகில் இருக்காது பாரே. (௰௪)

இருதுப்படலம்—முற்றிற்று.

—*—

## முகூர்த்தப்படலம்.

(௩௬௰) இருக்கும்நூதுபார்க்கும்இந்தவகையேபோல
என்னென்னகாரியங்கட்காமோவென்னில்
சருக்காதுவருஷம்தான்பிறக்குங்காலம்
தனித்ததொருமாசம்அதுபிறக்குங்காலம்
வருக்கமுதல்நினைப்பார்கள்வரவுபாரு
மற்றுளதும்விதைவிதைத்துஎடுத்தல்பாரு
குறுக்காகக்குறுகும்அந்தகொள்கைபாரு
கோடிவஸ்திரம்வாங்கினதின்குணமும்பாரே. (௧)

இதுவுமது

(௩௬௧) குணமானவிலைக்கிரயம்குடியாபாரம்
கொண்டுவைத்துஆளுகின்றஉரவுசேர்க்கை
மணமானவரன்முறையாம்சம்பந்தங்கள்
வல்பிணிகள்தீர்வதற்காய்மருந்தூதல்
கணமானபெரியர்களைக்காணும்நேரம்
கனிவானநற்காலம்துர்க்காலங்கள்
மணமானகுறுமுனிநூல்முழுதும்ஆய்ந்து
வசனித்தேன்ரோமரிஷிவகையாய்த்தானே. (௨)

முகூர்த்தப்படலம்—முற்றிற்று.

---

## நலந்தீங்குபடலம்.

(௩௬௨) பாரில்ஊண்அரசுமனம்செய்யநன்று
பதினெடுக்கநிலம்கொள்ளபயிர்கள்செய்ய
ஏருடன்மாடாடுகொள்ளபணிகள்செய்ய
எதிர்த்தவரைச்செயம்கொள்ளயாபாரம்பண்ண
தாரணியிற்சுயம்பாடஅடிமைசேர்க்க
தக்கதுவாம்வாழ்வுடனேசம்பத்துண்டாம்
மாறுனநடைஉறக்கம்சாவிற்செய்தால்
மனுச்சேதம்பொருட்சேதம்வகையாய்ப்பாரே. (௩)

இதுவுமது.

(௩௬௩) வகையாகப்பார்த்துமனம்தெளியவேணும்
வல்லவர்கள்பெரியோரைவணங்கவேணும்
தொகையாகச்சாஸ்திரத்தில்வினையம்வைத்து
தொடுகுறிபோர்கேள்வியினால்அறியவேண்டும்
பகையாகஇருந்ததினால்வருவதென்ன
பஞ்சபட்சிசாஸ்திரத்தைஉலகம்மீதில்

நகையாதேவெறுப்பிலுக்கர்உடனேகூடி
நளினம்போல்மித்துருவின்நிலையைப்பாரே. (௨)

நலந்தீங்குபடலம்-முற்றிற்று.

---

## வெற்றிதோல்விப்படலம்.

---*---

(௩௬௪) மித்துருவின்நிலையிலேவைத்துக்கொண்டு
வினவிநீகேட்கும்வகைசொல்லச்சொல்லு
பற்றுகிறமனம்ஆனால்நடையில்வைத்து
பவிஷஉள்ளஅரசிலேஇருந்துக்கொண்டு
வெற்றியாம்அட்சரத்தைஒன்றொன்று
வெல்லுவதுதிண்ணம்என்றுஉறுதிகொள்ளு
சத்தியமாய்முனிஉரைத்தமொழிதப்பாது
தனிவழக்குவெல்லுதற்குவகையைக்கேளே. (௧)

இதுவுமது.

(௩௬௫) வகைஎன்னஎதிரியைத்தான்தூக்கம்சாவில்
வைத்துநீஊண்அரசில்இருந்துக்கொண்டு
நகைஎன்னகேட்பவனைநடையில்வைத்து
நவிலவேஎதிரியுமேநழுவிப்போவான்
தொகைஎன்னசத்துருவின்பகைஆகாது
தொடராமல்நடப்பதற்குஅட்சரத்தைமாறு
பகைஎன்றசொல்போச்சுஉறவுண்டாச்சு
பார்த்தவர்கள்சமர்த்தன்எனல்ஆகும்பாரே. (௨)

இதுவுமது.

(௩௬௬) ஆகுமேபட்சியின்தன்தொழிலைத்தானும்
அப்பனேவகைவிபரமாகச்சொன்னேன்
ஏகமாய்ப்பதினெண்பேர்சொல்லார்சொல்லார்
என்மகனேநான்வெளியாய்ச்சொல்லிவைத்தேன்
போகுமேஎதிரியுடப்பகையும்போச்சு
பூதலத்தில்நடக்கும்வகைதெரியல்ஆச்சு
சேகரமாம்காலபெலன்அறிந்துக்கொண்டால்
செல்வம்ஒன்றுகோடியாய்ச்செழிப்பதாமே. (௩)

இதுவுமது.

(௩௬௭) பத்தானஇந்தநூற்கிணையேஇல்லை
பண்பானதனம்கோடிஈந்தாலும்தான்
முத்தானசாஸ்திரத்தைவெளிவிடாதே
முன்னோர்கள்மனதடக்கம்செய்துவைத்தார்

மகா

வித்தானபொருள்களெல்லாம்இதிலேதோன்றும்
வேதாந்தசூழ்முனையும்இதுவேஆகும்
கொததானஅடிதொடுத்துமுடிவளாக்கும்
கூறினேன்வாழ்வதற்காய்க்கூறினேனே. (௪)

உரோமரிஷிவிநாடிபஞ்சபட்சி-முற்றிற்று.

—*—



உ

முருகக்கடவுடுணை.

# பஞ்சபட்சிப்பலதிரட்டு.



முகவுரை.

(க) உன்னிஒருவன்உரைத்தமுதல்எழுத்தைப்
பன்னிப்பறவையாய்ப்பாவித்துமுன்னி *
உதயதிசைப்பட்சிஉண்மைஉரைக்கக்
கதைகாவியப்பொருளேகாப்பு.

நூல் முதலியபொருள்.

(உ) பூமேவுநான்முகத்துப் புங்கவன்சிஷ்டிப்பெவையும்
மாமேவுபட்சிஐந்தாய்வாழுமேசீர்மேவும்
வல்லூறுபேர்ஆந்தைவன்காகம்கோழிமயில்
எல்லாப்பிறப்பும்இது.

இதுவுமது.

(௩) ஒன்றுதிசைக்குருவிஒன்றிவரும்ஓர்தூதன்
நின்றநிலைஆருடத்தின்நேருநன்றி
வழுவாதுவந்தாய்ந்துவல்லவர்கள்சொன்ன
முழுவாகடத்தின்முறை.

இதுவுமது.

(௪) மொழிக்குமுதல்எழுத்தேமுன்உதிக்கும்ஆங்கே
பழிச்சும்அவன்தன்நிலையும்பார்த்துவழிப்பெறவே
போரல்வருவனவும்பேதம்அறிந்துணர்வுற்
றுராய்ந்துசொல்வதறி.

பூருவபட்சத்தின் அட்சரப்பட்சி.

(ரு) அம்முதல்நான்கும்வல்லூறிம்முதல்இரண்டாந்தை
உம்முதல்ரெண்டுகாகம்ஒண்கோழிஎம்முதல்ரெண்

---

* ஈண்டு வெண்பா முதலியசெய்யுட்களிற் பிரித்திருப்பது சொற் சொல்லாகவே யன்றிச்சீரும் தளையுமாகப்பிரித்த தன்றும்.

டுற்றமயில்ஒம்முதல்ரெண்டும்குறில்ஆண்பெண்நெடிலாம்
ஒற்றுய்தம்பேடென்றுணர்.

அமரபட்சத்தின் அட்சரப்பட்சி.

(௬) இம்முதல்இரண்டும்வல்லூறும்முதல்இரண்டாந்தை
ஓம்முதல்இரண்டும்உயர்காகம்அம்முதல்நான்
சாகும்இவைகோழிஆனமயில்எம்முதல்ரெண்
டாகும்அமரபக்கமே.

பூருவபட்சப்பகல்வாரம்-எ-ற்கும்-ஊண்பட்சி.

(௭) செவ்வாய்அருக்கன்வல்லூறாண்சிறந்ததிங்கள்புதன்ஆந்தை
கவ்வார்வியாழம்காரண்டம்கருதும்வெள்ளிகோழிஅதாம்
மவ்வார்சனியின்மயில்உண்ணும்மானேபூர்வப்பகல்அதனில்
இவ்வாறிந்நூல்குறுமுனிவர்இயம்பனுற்றார்உலகுக்கே.

அமரபட்சப் பகல்வாரம்-எ-ற்கும் ஊண்பட்சி.

(௮) திங்கள்சனிமயில்ஆம்சேய்அருக்கன்கோழிஅதாம்
பொங்குபுதன்காகம்போஜனம்ஆம்மங்கையே
அந்தணனுக்காந்தைஅணிபுகர்க்குவல்லூறு
சந்ததமும்பிற்பகற்கேசாற்று.

பூருவபட்சஇரவு வாரம்-எ-ற்கும் ஊண்பட்சி.

(௯) ஞாயிறுசெவ்வாய்காரண்டம்
நல்லபுந்திமதிகோழி
மாயப்பொன்னேமயில்ஆரும்
வளரும்வெள்ளிவல்லூறும்
ஓயாஆந்தைசனிஉண்ணும்
உயரும்சுங்குல்உணர்க்கென்ன
ஆயும்வேதக்குறுமுனிவர்
அருளால்அறைந்தஅரும்பொருளே.

அமரபட்சஇரவு வாரம்-எ-ற்கும் ஊண்பட்சி.

(௰) மந்தன்சோமன்கோழியின்ஊண்
மானேவெள்ளிமயில்உண்ணும்
புந்திஆந்தைபோஜனம்ஆம்
பொன்னிற்காகம்இனாஅருந்தும்
சிந்தைமகிழ்ந்தேசேய்இரவி
தினத்தில்வல்லூறமுதுசெயும்
அந்தித்தோன்றும்பிற்பக்கத்
தடைவுசொன்னோம்அறிநன்றே.

பூருவபட்ச வாரம்-எ-ற்கும்படுபட்சி.

(௰௧) அருக்கன்வெள்ளிமுனிமரணம்
அணிசேர்செம்பொன்காரியுடன்



நெருக்கும்வல்லூறேமரணம்
நெறியாம்காகம்மதிமரணம்
செருக்கும்செவ்வாய்கோழிஅதாம்
சேர்ந்தபுந்திமயில்மரணம்
கருக்கும்குழலாய்முறபக்கம்
கடிகைஅறுபான்சாவாமே.

அமரபட்ச வாரம்–எ–ழிற்குபடுபட்சி.

(௰௨) கூறிடும்திங்கள்ஆந்தைகுலவுசேய்வல்லூருரும்
மீறியஅருக்கன்காகம்வெள்ளியும்புதனும்மஞ்ஞை
ஏறியசனிவியாழம்கோழிஆம்இயம்புங்காலை
ஆறுபத்தாரும்கன்னல்அளவும்சாம்அமரபக்கம்.

பூருவபட்சப் பகல்இரவு-உ–ற்கும்பட்சி ஒன்றன்
தொழில்முறை.

(௰௩) உண்டுநடந்துஉலகாண்டுநித்திரைஆய்த்
தண்டம்உறரும்பகலிற்சாவாரும்உண்டே
அரசாய்இறந்துவழிஅநேகம்போய்
இரவாய்உறங்கும்இடை.

அமரபட்சப் பகல்இரவு-உ–ற்கும் பட்சி ஒன்றன்
தொழில்முறை.

(௰௪) உண்டுடனேசெத்துமுறங்கிஅரசாண்டு
மண்டிவழிநடக்கும்மாமயிலேஅன்றிரவில்
உண்டிடும்உறங்கிஉடனேநடந்திறந்து
கண்டரசன்ஆகும்எனக்காண்.

பட்சம்–உ–ற்கும்கடைநிலைப்பட்சிகள்.

(௰௫) அறிவானபூருவத்தில்மரணம்உண்ணும்
அப்பனேஅவ்விரவில்தூக்கம்உண்ணும்
கரியானஅமரத்தில்நடைதான்உண்ணும்
கண்டுசொன்னேம்பின்இரவில்அரசன்உண்ணும்
வரியானஅட்சரங்கள்பிரித்துப்பார்த்தோர்
வகைஅறிவார்மற்றோர்கள்அறியமாட்டார்
நெறியாகச்சொன்னோர்கள்பெரியோர்ஐயா
நிட்சயமாய்க்கும்பமுனிஇகழ்ந்திறோ.

பூருவபட்சப் பகல்சாமம்-ரு-ற்கும் பட்சிகள்-ரு-ன் தொழில்முறை.

(௰௬) வலிஉண்ண ஆந்தைவழிநடக்கக்காகம்
உலகாளும்கோழிஉறங்கும்-கலபமயில்
செற்றுப்போம்என்றேசெயல்உரைத்தல்பூருவத்தின்
உற்றபகல்ஆம்என்றுணர்.

இதுவுமது.

(௰௭) நினைவின்மயில்உண்ணநேர்நடக்கவல்லூ
றினிதாந்தையேஅரசன்ஆகத்தனியனுய்
கறுத்தகொடிதூங்கிவிழக்காசினியிற்கோழி
இறக்கும்முற்பக்கப் பகல்.

இதுவுமது

(௰அ) அறிவானகோழிஅமுதுண்ணத்தோகை
விரிவாய்நடக்கவலிவேந்தாய்-செறிஆந்தை
நித்திரைஆம்காகம்நெடிதிறக்கும்பூருவத்தின்
நித்தபகல்ஆகும்நினை.

இதுவுமது.

(௰௯) பூருவபக்கத்தின்பகலிற்காகம்பொசிக்க
ஊர்நடக்கக்கோழிஉலகாளத்தேர்மயில்தான்
வல்லூறுறங்கமடிந்துவிடும்ஆந்தைஅது
நல்லாய்நவில்வதறி.

இதுவுமது

(௨௰) உண்ணப்படின்ஆந்தைஊர்நடக்கக்காக்கைஅது
மண்ஆளக்கோழிமயில்தூங்கப்பெண்ணே
தவியாதவல்லூறுதான்இறக்கும்கண்டாய்
இவைபூருவப்பகல்ஆம்என்.

பூருவபட்ச இராவுஜாமம்-ரு-ற்கும் பட்சிகள்-ரு-ன் தொழில்முறை.

(௨௧) அமுதுசெய்யக்காக்கைஅடர்ஆந்தைசெல்ல
சமர்இடும்வல்லிஊறரசன்ஆகத்திமிரப்உற்றுத்
தூங்கிவிழத்தோகைஅதுதுஞ்சிவிழுமேகோழி
ஈங்குமுற்பக்கத்திரவினில்.

இதுவுமது.

(௨௨) தோகைஉண்ணக்கோழித்தொடர்ந்துதூர்ப்பயணம்உறக்
காகம்அரசாளமுனிக்கண்டுபிலச்சாகுமே

வல்லூறுமுற்பக்கமாஇரவில்ஆம்என்றார்
சொல்லூறும்முன்னோர்துணிந்து.

இதுவுமது.

(உ௩) ஆந்தைஉண்ணவல்லூறதுநடக்கத்தோகைமயில்
வேந்தனும்கோழிவிழிதுயிலும்மாய்ந்துவிடும்
காகம்அதுபூருவபக்கத்திரவில்இவை
ஆகும்என்றார்முன்னோர்அறிந்து.

இதுவுமது.

(உ௪) கோழிஉண்ணக்காகம்குலாவிவழிநடக்க
ஏழுலகும்ஆந்தைஇனிதாளத்தாழ்வில்லா
வல்லூறுதூங்கமயில்மடியும்முன்இரவில்
வல்லோர்உரைத்தவழி.

இதுவுமது.

(உ௫) வல்லூறுதான்உண்ணவர்ன்னமயில்நடக்கப்
பல்ஆன்றகோழிப்பதிஆளநல்லாய்கேள்
ஆதல்உறும்காகம்அனந்தல்செயஆந்தைசாம்
ஏதில்முற்பக்கஇரவில்.

அமரபட்சப்பகல்ஜாமம்-௫-ற்கும் பட்சிகள்
௫-ன்-தொழில்முறை.

(உ௬) மயில்உண்ணக்கோழிஅதுமண்ஆளக்காகம்
உயிர்அழியனந்தைதான்ஓடச்சயனம்
சிகரம்உறும்வல்லூறுதான்செயவேசெய்யும்
பகரும்அமரத்தின்பகல்.

இதுவுமது.

(உ௭) ஆந்தைஉண்ணவல்லூறரசுசெயமாமயில்தான்
மாய்ந்துவிடக்கோழிவழிநடக்கநேர்ந்ததொரு
காகமேநித்திரையாய்க்காணும்அமரபக்கத்
தாகும்பகலில்அறி.

இதுவுமது.

(உ௮) அமுதுசெயக்கோழிஅரசாளக்காக
மமதைஉறும்ஆந்தைமடியத்திமிரமுடன்
வற்புறும்வல்லூறேகமாமயில்உறங்கிவிடும்
பிற்பகலில்எங்கிதனைப்பேன்.

இதுவுமது.

(௨௯) உணாஉண்ணவல்லூறுலகாளமஞ்ஞை
பிணம்ஆகக்கோழிபெரிதும்துணை இன்றிக்
காக்கைநடந்துசெலக்கண்டாந்தைகண்டுயிலும்
போக்கும்பகலிற்புகல்.

இதுவுமது.

(௩0) கொடிஉண்ணஆந்தைதருவலையம்தான்ஆள
படிவாகவல்லூறுமஞ்ஞைநடைஅதுவாய்
ஒப்பரியகோழிஉறங்குமேபிற்பக்கத்
தப்பகலில்ஆம்என்றறி.

அமரபட்ச இரவுஜாமம்–௫–ற்கும் பட்சிகள்-௫-ன்
தொழில்முறை.

(௩௧) உண்டிஉண்ணமஞ்ஞைஉவந்தாள்வல்லூறு
மண்டலத்தில்ஆந்தைமடியவேகண்டுகொடி
ஊர்க்குசெலக்கோழிஉறங்கிவிடும்மேதினியில்
ஏற்கும்ஒருபின்இரவினில்.

இதுவுமது.

(௩௨) பொசிக்கவலியன்புவிஆளஆந்தை
நசிக்கநற்காகம்நடக்கத்துசக்கோழி
தோகைதுஞ்சும்பின்இரவில்கோதாய்மலயம்உறும்
வாகைசேர்மாமுனிவன்வாக்கு.

இதுவுமது.

(௩௩) முனிஉண்ணக்காகம்முயன்றாளச்சேவல்
இனிசாகத்தோகையபில்ஏகத்தனியான
வலியனேகண்ணுறங்கும்மாதேஉலகிற
பெலாஈனப்பின்இரவினில்.

இதுவுமது.

(௩௪) காகம்உண்ணக்கோழிஅதுகாசினியைஆளமயில்
சாகவலுவல்லூறுதான்நடக்கயோகம்உள
நித்திரையாம்பின்னிரவில்நிர்மலசுழுத்தியின்ஆம்
நித்திரையார்சொன்னநெறி.

இதுவுமது.

(௩௫) போசனம்ஆகக்கோழிபூவுலகாளத்தோகை
நாசம்உறும்வல்லூறுநல்ஆந்தையோசனையாய்த்
தான்சொல்லும்காகம்சயனம்அதான்பின்இரவில்
மான்சொல்லும்கண்ணேமதி.

பூருவபட்சப்பகல் தொழில்முறை-டு-ற்கும்நாழிகை.

(௩௬) ஊண்பட்சிக்கொன்றரை ஆம்ஒன்றேகால்தான்நடைக்காம்
ஏணில்அரசுக்கிரண்டாகும்வாணுதலாய்
தூங்கும்அதற்கோர்முக்கால்துஞ்சும்அதற்கோர்அரை ஆம்
பாங்குடையமுற்பகலினில்.

பூருவபட்ச இரவுதொழில்முறை-டு-ற்கும்நாழிகை

(௩௭) உண்பானுக்கொன்றேகால்ஒன்றேகால்தான்நடைக்கு
மண்ணாள்அரசுக்கொன்றாகும்ஆல்பெண்பாவாய்
நித்திரைக்கொன்றொன்றரையேநின்றதுபோற்பொன்றுமதற்
கித்தலத்தின்முன் இரவினில்.

அமரபட்சப்பகல்தொழில்முறை-டு-ற்கும் நாழிகை.

(௩௮) ஊண்கடிகைரெண்டாகும்ஒத்தநடைஒன்றரைஆம்
ஆணின்அரசமுக்கால்அன்னமேதவினில்
உறக்கம்அரைநாழிஉயிர்போக்கொன்றேகால்
பறக்கும்பிற்பக்கப்பகல்.

அமரபட்ச இரவுதொழில்முறை-டு-ற்கும்நாழிகை.

(௩௯) ஊண்எழுகால்போக்கெழுகால்ஊராள்வதோர்முக்கால்
மாணின்றுறங்கும்அதுமுக்கால்சேணின்று
சாகும்அதுநாற்கால்ஆம்சாற்றும்கடிகைஇவை
ஏகும்பிற்பக்கஇரவில்.

பூருவபட்சத்தின் திதிப்பட்சி.

(௪௰) பன்னொன்றுரொன்றுவவிபன்னிரண்டேழ்ரெண்டாந்தை
பன்மூன்றுமூன்றெட்டுகாகம்அதாம்பன்னான்கு
நான்கொன்பதுகோழிப்பதினைந்தைந்தொருபத்
தான்மயில்பூருவத்தில்ஆம்,

அமரபட்சத்தின் திதிப்பட்சி.

(௪௧) பதினைந்துபத்தைந்துவல்லூறுநான்கொண்
பதுபதிநொர்காந்தைமூன்றெட்டும்பதின்மூன்று
வாயாசம்இரண்டேழ்பனிரண்டுகோழிமயில்
தேய்வுபன்னொன்றொன்றாறுமே.

---

குறிப்பு தனைபிரிக்குமிடத்து சொற்சொல்லாகப்பிரித்தலினாலே பி
ரிவுபட்டமெய்யையும் உயிரையும் ஒன்றுபடுத்தி உயிர்மெய்யாக்கியு
ம்தோன்றின மெய்யைக்கெடுத்தும் பிரித்துக்கொள்க.

பூருவபட்சம் அமரபட்சம்—௨—ற்கும் நட்சத்திரப்பட்சி

(௪௨) ஐந்தாறைந்தைந்தா றசுவினிநேர் ஆறைந்
தைந்தாறைந்தாக இரேவதிநேர் முந்திய
பட்சமும்பின்பட்சம்முறையேபகருவர்காண்
பட்சிஐந்தும்உள்ளபடி

பூருவபட்ச இராசிப்பட்சி

(௪௩) அறிவுடையாய்ஆடரிதேள்வல்லூறுஞெண்டோ
டுறும்மிதுனம்கன்னிமறையோன்பிறைநிலமீன்
காகம்எருதுதுலைகோழிமகரம்கும்பம்
தோகைமுதற்பக்கம்இதாம்சொல்

அமரபட்ச இராசிப்பட்சி

(௪௪) எருதுதுலைமீன்வல்லூறியாழ்சிலைசால்ஆந்தை
அரிஅரிவைமான்காகம்ஆகும்மறியுடன்தேள்
வாரணம்அம்ஞெண்டுமயில்ஆகும்பிற்பக்கத்
தாரணநூல்சொன்னதறி

பூருவபட்சதிசைப்பட்சி

(௪௫) சொல்ஊறும்பூருவபக்கத்தில்தொல்கிழக்கு
வல்லூறுதெற்காந்தைவாயசம்மேற்கல்ஊறும்
கூந்தல்நல்லாய்வடக்குகோழிஆம்மத்திஅநூ
வாய்ந்தமயில்ஆகமதி

அமரபட்சதிசைப்பட்சி

(௪௬) அமரபக்கம்தன்னில்கிழக்காகும்காகம்
எமன்தன்திசைஅதுதான்கோழிகுமரன்உறும்
வாகனமேமேற்காகம்வடக்காந்தைமத்திவலி
ஆகும்எனச்சொன்னோர்அறிந்து

உவாக்காலதிசைப்பட்சி

(௪௭) மத்திபத்தில்வல்லூறுவாழ்ஆந்தைதெற்காகும்
ஒத்ததொருகிழக்காம்ஒண்காகம்இத்திசையில்
தெற்காகும்கோழிசிறந்தமயில்மேற்காகும்
எக்காலும்சாற்றும்இயல்

பூருவபட்சஅங்கப்பட்சி

(௪௮) மிதம்ஆகும்கூந்தல்விரல்உடன்தோள்மார்பு
துதிசேர்கைப்பட்டைகுய்யம்தோகைசதிர்ஆன
நெற்றிதொண்மார்பின்கீழ்நீள்பிடரிஊருஇவை
உற்றநொருகோழிஎனஓது

௰எ

இதுவுமது

(௪௯) ஓதரியநாசிவிழிமுழங்கைஉந்திமுது
தேதில்முழங்கால்காகம்என்பரோபோதுறும்வாய்
நல்லமுன்கைபின்புபக்கம்நாட்டும்நடுமுதுகு
வல்லகெண்டைஆந்தைஅதுஆம்

இதுவுமது

(௫0) ஆமேகழுத்துமணிக்கட்டுகீழாம்கை
நாமேவலதுபக்கம்நல்மருங்குபூங்குழலாய்
வல்லூறுமுதற்பக்கம்ஆம்அங்கப்பட்சிஅது
சொல்வாய்முழுதும்துணிந்து

அமரபட்சத்தின்அங்கப்பட்சி

(௫௧) துணிந்துரைப்பாய்கண்டம்மணிக்கட்டுந்திதோளும்
மணந்தஇடைபூங்கணைக்கால்வல்லூறுணர்ந்தபடி
நற்கைவயிறுநடுமுதுகுகெண்டைக்கால்
அற்குழலாய்ஆந்தைஎனல்ஆம்

இதுவுமது.

(௫௨) குழல்ஆர்ந்தநல்லாய்கேள்மார்பின்கீழ்தொண்டை
எழில்ஆர்ந்தமுன்கையோடேணைமுழங்கையோ
டான்றவிரலுடனேகைக்கீழ்வலப்பக்கம்
ஏன்றஎழில்முதுகோடங்கு

இதுவுமது.

(௫௩) ஈங்குறும்நாசிவிழிவாய்இடப்பக்கம்
ஓங்கும்முழங்கால்காகம்ஓதுவார்தீங்கில்நெற்றி
கைப்பட்டமார்புபிடரிதுடைகார்குழலாய்
செப்பம்உறும்கோழிஎனச்செப்பு

இதுவுமது.

(௫௪) செப்பம்தலைதோள்சிறந்தகைக்கீழ்கூந்தலுடன்
மெய்ப்புடையகுய்யம்வியன்மயில்ஆம்பிறபக்கம்
தன்னில்தொடுகுறியால்சாற்றும்அங்கப்பட்சிஇவை
அன்னநடைமாதேஅறி

அங்கப்பட்சியில் இன்னம் ஒருஅடைவுஅகாரசப்தம்

உடையான்அங்கப்பட்சி

(௫௫) காணும்அகாரப்பேரான்உடையகண்டம்முதல்
காணும்சிரகாந்தைக்காகம்பேணிய
கோழிஉடம்புமயில்முன்பின்ஆகும்வலியன்
தாழ்வில்இருசாணம்தான்

இகாரசப்தம்உடையான்அங்கப்பட்சி

(௫௬) தானும்இகாரப்பேராள்உடையகண்டம்முதல்
காணூர்தலைக்காகம்கைக்கோழிமானே
உடலேமயில்முன்பின்வல்லூறுகால்தான்
அடல்ஆந்தைஅண்டும்என்அல்லும்

உகாரசப்தம்உடையான்அங்கப்பட்சி

(௫௭) அண்டும்உகாரப்பேரான்உடையசென்னிமுதல்
கண்டம்வரைக்கோழிஆம்கைமயில்ஆம்உண்டான
வல்லூறுடல்முன்பின்வாழுமேஆந்தைஅது
நல்லகால்காகம்எனநாட்டு

எகாரசப்தம்உடையான்அங்கப்பட்சி

(௫௮) நாட்டும்எகாரப்பேரான்உடையசென்னிமுதல்
ஊட்டும்கைவல்லூறுடல்ஆந்தைகாட்டிடும்முன்
பின்ஆகும்காகம்பெருத்ததோர்கோழிகால்
நன்னுதலாய்கண்டுநவில்

ஒகாரசப்தம்உடையான்அங்கப்பட்சி

(௫௯) நவிலும்ஒகாரத்தின்சென்னிவலியன்
கவரும்கைஆந்தைஉடல்காகம்புவிஅதனில்
தேனேமுன்பின்கோழிதேவர்க்கெல்லாம்அடுக்கும்
மானேமயில்கால்மதி

பூருவபட்சத்தின் பட்சிநிறம்

(௬௦) வல்லூறுபொன்நிறம்ஆம்வாழ்ஆந்தைவெள்ளைஅதாம்
சொல்லாரும்காகம்சிவப்பாகும்நல்லாய்கேள்
கோழிநிறம்பச்சைகுளிர்தோகையேகறுப்பு
நாழிமணக்கநவில்

அமரபட்சத்தின்பட்சிநிறம்

(௬௧) ஆந்தைசிவப்பாம்அணிகாகம்பொன்நிறம்ஆம்
வாய்ந்தபச்சைவர்ணமயில்ஆகும்ஏந்திழையீர்
வெள்ளைஆம்கோழிவிளங்கும்வெகுகறுப்பு
வல்லூறுகண்டுமதி

பூருவபட்சத்தின்பட்சிக்குலம்

(௬௨) வல்லூறுபார்ப்பான்வளர்ஆந்தைதான்வணிகன்
செல்லாரும்காகம்செகத்தரசன்நல்லாய்கேள்
கோழிஆம்வேளாளன்கூறுமயில்சண்டாளன்
ஆழியான்சொன்னதறி

அமரபட்சத்தின்பட்சிக்குலம்

(௯௩) பொன்மறையோன்ஆந்வலியன்பேர்வேந்தன்ஆந்தைஆம்
துன்னும்எழில்காகம்துலைவணிகன்மன்னும்
உழுதுலத்தோன்கோழியெனும்கால்மஞ்ஞை
இழிகுலத்தோன்என்றேஇசை

பூருவபட்சத்தின்பட்சிபூதம்

(௯௪) அரியபுவிவல்லூறப்பாகும்ஆந்தை
கரியதொருகாகம்கனல்ஆம்பெரியகால்
தேனேநிகர்மொழியாய்செஞ்சூட்டின்வாரணம்தான்
வான்ஆகும்தோகைமயில்

அமரபட்சத்தின்பட்சிபூதம்

(௯௫) வல்லூறுதேயுவாம்வல்ஆந்தைவாயுவாம்
பொல்லாக்கரும்காகம்பூமிஆம்நல்லாய்கேள்
நீர்ஆகும்கோழிதான்நீலமயில்காகம்ஆம்
கார்ஆர்குழலாய்கனி

பட்சம்-உ-ற்கும்பட்சிமுக்காலம்

(௯௬) ஆந்தைமயில்முற்காலம்ஆனதொருவாரணம்தான்
சேர்ந்தநிகழ்காலம்செப்பிடுமேவாய்ந்ததொரு
வல்லூறுகாகம்வருங்காலம்காட்டுமே
வல்லோர்உரைத்தவழி

பட்சம்-உ-ற்கும்பட்சிதாதுமூலசீவன்கள்

(௯௭) வல்லூறுமூலம்வளர்ஆந்தைசீவன்ஆம்
சல்லாபம்ஆம்காகம்தாவாம்நல்லாய்கேள்
கோழிமூலத்தாதுகோலமயில்சீவதா
தாழியான்சொன்னதறி

பட்சம்-உ-ற்கும்பட்சிவடிவு

(௯௮) வல்லூறுநீள்வட்டம்மால்ஆந்தைஐங்கோணம்
அல்ஆகும்காகம்அறுகோணம்மெல்லியலாய்
கோழிஅதுநாற்கோணம்கோலமயில்முக்கோணம்
ஆழியான்சொன்னதறி

பட்சம்-உ-ற்கும்பட்சிகால்

(௯௯) வல்லூறிருகால்ஆம்வன்காகம்நீர்க்கால்ஆம்
நல்லதிறல்ஆந்தைஅறுநாற்கால்ஆம்சொல்லில்

குறும்கோழிகொப்பாம்குலவும்மயில்பட்சிப்
பெருங்கால்ஆம்என்றிதனைப்பேசு

பட்சம்-உ-ற்கும் பட்சிநிலம்

(௭0) வல்லூறுபாலைவளர்ஆந்தைவண்குறிஞ்சி
நல்லாய்கேள்காகம்அதுநல்மருதம்சொல்அறிய
வாரணமேமுல்லைவளரும்மயில்நெய்தல்
ஆரணநூல்சொன்னதறி

பட்சம்-உ-ற்கும்பட்சிலோகம்

(௭௧) வல்லூறுபொன்ஆம்வளர்ஆந்தைவெள்ளிஅதாம்
சொல்ஆரும்காகம்அதுசெம்பாகும்நல்லாய்கேள்
கோழியேவெண்கலம்ஆம்கோலமயில்இரும்பாம்
ஆழியான்சொன்னதறி

பட்சம்-உ-ற்கும் பட்சிஆண்பெண்

(௭௨) வல்லூறுகாகம்மயில்மூன்றும்மூண்ஆகும்
நல்லதிறவுகோல்நாம்சொன்னோம்நல்லாய்கேள்
ஆந்தைபொற்கோழிபெண்ஆகும்இதோதோழி
தேர்ந்தறிந்துசொல்லுந்திறம்

பட்சம்-உ-ற்கும்சுவை

(௭௩) தித்திக்கும்ஆந்தைசிறுபுளிப்புகோழிஅதாம்
எத்தும்ஒருகாகம்இனிதுவர்ப்பாம்பத்திசெயு
வல்லூறுகாகம்மயில்கைக்கும்என்பாரே
அல்லார்குழலாய்அறி

பட்சம்-உ-ற்கும்ஆள்வரத்து

(௭௪) வல்லூறுநிற்கின்றான்மாமறையோன்தான்மீண்டான்
வல்லகருமம்காகம்வருகின்றான்மெல்லியலாய்
கோழிதான்ஊர்க்குள்வந்தான்கோலமாமஞ்ஞைஅரை
நாழிகையிலேவருவான்நாடு

பட்சம்-உ-ற்கும் வரவுகாலஅளவு

(௭௫) கோழிக்குநான்குநாள்குவலையத்திலேமிக்க
வாழும்மடவல்லூறுக்கைந்தேநாள்தோழிகேள்
காகம்நாள்மூன்றுகும்கார்ஆந்தைநாள்இரண்டு
தோகைமயில்நாள்ஒன்றும்சொல்

பட்சம்—உ-ற்கும் பட்சிபருவம்

(எசு) உண்ணும்அதுபாலன்உயர்நடைதானேகுமான்
பண்பாம்அரசதுவேபார்வேந்தன்நண்புடைய
முற்றும்துயில்கிழவன் மோனமுடிந்தோன்சாவு
பற்றும்பருவப்பயன்

பூருவபட்சத்தின் பட்சிசத்துரு

(எஎ) வலிசத்ருவாயசமும்கோழியாம்கோழி
கலபமும்தான் ஆந்தைசத்ருஆகும்கலபம்வலி
வாயசம்அதற்குவல்லூருந்தைகோழிக்காந்தை
வாயசமும்மஞ்ஞைசத்ருஆம்

அமரபட்சத்தின்பட்சிசத்துரு

(எஅ) கோழிமுனிவல்லூறுக்காந்தைக்குமஞ்ஞைவலி
கோழிமஞ்ஞையும்காகசத்துருவாம்கோழிக்குக்
காகமுடன்வல்லூறும்பிற்பகலில்தோகைக்குக்
காகமுடன்ஆந்தைஎனக்காண்

பூருவபட்சஊணின் பலாபலன்

(எகூ) போசனம்ஆகில்பதிவாழும்
போனார்மீள்வர்போம்கவலை
காசினிவாழும்மழைபொழியும்
களவும்இல்லைக்கதிர்விளையும்
பேசில்கன்னிப்பேறுகும்
பிணியும்தீறும்பெண்பெறுவள்
மாசில்செழும்பொன்வாணிபம்ஆம்
மன்னனைவெல்வாய்மாங்குயிலே

பூருவபட்சநடையின்பலாபலன்

(அ0) யாத்திரைஆகில்நிலைகுலையும்
ஒன்னார்வெல்வர்இருநிதியோம்
காத்திரம்இல்லாக்கதிர்விளையும்
கன்னியர்வாழ்க்கைநன்றாகா
மாத்திரள்செல்லுமெம்பாருள்கூடா
வேட்கைதவிர்ந்துமணம்கூடா
சூத்திரம்சொன்னபடியாலே
சொன்னார்பெரியோர்கரிகுழலே

பூருவபட்சஅரசின் பலாபலன்

(அக) அரசேசெய்பிறப்புவிப்பேறும்
அரசாலேபலன்எய்தும்

முரசும்அதிரும்வரிசையுடன்
ஏடகருமம்தான்விலகும்
பரிசும்பெரியோர்திரள்இடுவர்
பழையபிணிபோம்பயம்இல்லை
புரைபோம்களவுதான்காணும்
போக்கும்இல்லைபொற்கொடியே

பூருவபட்ச நித்திரையின்பலாபலன்

(அ௨) தூங்கும்ஆகில்நோய்மாறு
தூரம்போனார்தாம்மீளார்
ஆங்கேகருமம்நன்றாகா
அரிவைவாழ்க்கைத்தாழ்வாகும்
தீங்கேஅல்லால்மழைபொழியாச்
செந்நெல்விளையாச்செய்கருகி
ஓங்குமணமும்தாராதே
உண்மையாகஉரைத்தோமே

பூருவபட்சமரணத்தின்பலாபலன்

(அ௩) துஞ்சும்ஆகில்சாவுசொல்லும்
தொலையாப்பிணியும்தான்எய்தும்
நெஞ்சில்நினைந்தபொருள்கூடா
நிலையும்காணார்நிலைகுலைவார்
வஞ்சர்நோயும்மிகவுண்டாம்
மனையாள்வெறுப்பாள்உறவாகாள்
கஞ்சமலர்ஆர்குழலாளே
கருத்தால்உரைத்ததெடுத்துரையே

அமரபட்ச ஊணின்பலாபலன்

(அ௪) கெடுதியும்உடனேகாணார்
கிளையுடன்வாழ்வுபெறும்
கடுகியபிணியும்தீரும்
கலக்கமோசற்றும்இல்லை
அடைமழைபெருகஉண்டாம்
அஃகமும்மலிவாம்கண்டாய்
முடுகியபயணம்இல்லை
மொழியும்பிற்பக்கஊணே.

அமரபட்சநடையின் பலாபலன்

(அ௫) வெற்றியும்சுகமும்உண்டாம்
வியாதியும்மாறும்பின்பு

தற்றியகருமங்கூடும்
பயமில்லை அகமும்தாழா
உற்றதோர்கெடுதிகாணும்
உறும்மழைஉண்டுதூரத்
துற்றவர்வரவுகூடச்
சொல்லும்பின்நடக்கத்தோன்றில்

அமரபட்சஅரசின்பலாபலன்

(அசு) செயமொடுசுகமும்உண்டு
சிறந்ததோர்பயணம்தன்னில்
புயல்இடும்மழையும்அற்பம்
புவிதனிற்கலக்கம்இல்லை
இயம்பிறூற்பெறலாம்வெற்றி
இலாபமும்நீள்வதாகும்
பயம்விளையாதுதேய்வின்
அரசதாம்பறவைஆகில்

அமரபட்சநித்திரையின் பலாபலன்

(அஎ) உன்னியபிணிஅலால்மற்
றொருபிணிஅதிகம்ஆகும்
மன்னியமழையேஇல்லை
வைத்தனகெடுதிஆகும்
துன்னியநெஞ்சில்தோடம்
தோன்றிடும்கருமம்செய்யும்
பன்னியபிற்பக்கத்தில்
உறங்கும்அப்பறவைஆகில்

அமரபட்சமரணத்தின் பலாபலன்

(அஅ) காவினில்லயமும்உண்டும்
கலகம்ஆம்கருமம்எல்லாம்
தீவினைப்படும்மற்றன்றிச்
செய்யும்நல்வினைகள்ஆகா
சாவினில்விழுந்தபட்சித்
தாழ்பக்கத்துதிப்பதாலே
பூவினிற்சிறந்தமாதே
புகன்றனர்புள்ளின்நூலே

உரோமரிஷிவிநாடிபஞ்சபட்சி மூலமும்
பஞ்சபட்சிபலதிரட்டு மூலமும்
முற்றிற்று.